உ

சிவமயம்.

திருநெல்வேலி

# ஸ்ரீ காந்திமதியம்மைபேரிற்

## கலித்துறையந்தாதி

இஃது

திருநெல்வேலியிலிருக்கும்

தச்சநல்லூர்வன்னியப்பபிள்ளையவர்கள்

குமாரர்

**அழகியசொக்கநாத**

பிள்ளையவர்கள்

பாடியது

திருநெல்வேலிவடுகக்குடிமுடுக்குத்தெரு

பழனிக்குமாருப்பிள்ளையவர்கள்

குமாரர்

சுப்பிரமணியபிள்ளையவர்கள்

வேண்டுகையின்பொருட்டு

திருநெல்வேலி

மகாவித்வான்

சாலிவாடீசுரஓதுவாமூர்த்தியவர்களாற்

பார்வையிடப்பட்டு

திருநெல்வேலி

முத்தமிழாகரஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

அக்ஷய௵ தைமாசம்

இதன்விலை அணா ௨

## பிரசித்தப்பத்திரிகை

இஃது

பஞ்சம்நீங்கவேண்டும்பொருட்டு லோகோபகாரமாகப்பாடியது

அச்சிற்பதிப்பித்தான இப்புத்தகங்கள்வாங்கவிருப்பமுடையவர்கள்



திருநெல்வேலி

வடகைக்குடிமுடுக்குத்தெரு, சுப்பிரமணியபிள்ளையவர்களிடத்தில்

வாங்கிக்கொள்ளலாம்



உ

சிவமயம்

# திருநெல்வேலி

# ஸ்ரீ காந்திமதியம்மைபேரிற்

# கலித்துறையந்தாதி

## விநாயகர்காப்பு

அஞ்சந்தெளிய நடைபயில்காந்திமதியம்மைமேற்..............*
பஞ்சந்தெளிய நல்லந்தாதிபாடிப்பரவுதற்கு...................*
நெஞ்சந்தெளிய மதிகாட்டிவாக்குநிரம்பநல்கு..................*
நஞ்சந்தெளியவுண்டோனருள்சந்திவிநாயகனே ...........*

—*✠*—

திருநெல்லைக்காந்திமதியேயிப்பஞ்சந்தெளிகவென்றே.......................*
யொருசொல்லை நீதிருவாய்மலர்வாயிங்குனதுதவி..........................*
யருகில்லையேலெமக்காருண்டிந்நாண்மட்டனுபவித்து.......................*
வருதொல்லை தீர்த்தருளெண்ணான்கறமும்வளர்த்தபொன்னே...............(க)

பொன்னம்பல வர்மகிழுமையேபஞ்சம்பூமிதனி.................................*
லின்னம்பல முற்றிருப்பதென்னேகஷ்டமேவளரு.............................*
முன்னம்பல ன்கொடுத்தாண்டருள்வாயருண்முற்றும்வைத்தே..................*
யன்னம்பல வுயிர்க்குந்தந்துகாவுன்னடைக்கலமே...........................(உ)

அடைக்கலங்காத்தருளம்மாபலசரக்கவ்வளவுங்
கடைக்கலங்காரமென்றேங்கிவந்தோம்பஞ்சகாலவன்மை
மிடைக்கலங்காமற்பொருள்கொடுப்பாயெங்கட்கென்றென்றைக்கும்
படைக்கலங்காண்விழிமாதேபணிவமுன்பாதங்களே (௩)

பாதங்களேவங்கமாகிமெய்யன்பர்துன்பக்கடலி
லேதங்கிடாமற்கரையேற்றுமென்பதெமக்கிலையோ
நிதங்கமானவிப்பஞ்சத்திலேபசித்தேங்கியுயிர்ச்
சேதங்களம்மாகணக்குமுண்டோதொகைசெப்புதற்கே (௪)

செப்பப்படாதிந்தப்பஞ்சத்திலேபட்டசீரழிவே
வெப்பப்படாதவுன்கண்ணோக்கமின்றிவிடுவித்திதைத்
தப்பப்படாதிங்கறிந்தறியாதுகுற்றஞ்செயினு
மொப்பப்படாதம்மவெக்காலமுமெங்கட்குன்பலமே (௫)

உன்பாதமேகதியம்மாவிங்கெல்லையுமையவளே
பொன்பார்பெண்ணாசையிலதேற்சுகமதுபோலுமில்லை
வன்பாயதாவும்படைத்தநியாயத்தில்வாடுகின்றே
மன்பாகத்தீர்த்துவைப்பாய்பஞ்சத்தாற்படுமாபத்தையே (௬)

ஆபாரதத்துமுண்டோவிதுபோலநியாயமம்மா
நீபார்த்திப்பஞ்சத்தையோட்டவென்றால்வெகுநேரமுண்டோ
தாபாக்கினியில்வருந்தியபேர்கள்வந்தாலிரங்கா
மாபாதகரைச்சுமந்ததெவ்வாறிந்தமண்டகளே (௭)

மண்கூடவாய்விட்டழுமொருசத்தமம்மாமனசும்
புண்கூடெனநொந்துபோச்சுதம்மாபட்டபுன்மைசொல்ல
வெண்கூடவில்லைப்பிழைப்பதெவ்வாறடியேங்களம்மா
கண்கூடுவீங்கியுலகோர்படும்பஞ்சகாலத்திலே (௮)

காலத்தைக்கஷ்டம்பொருமனெனுந்தோம்பங்கயனைநொந்தோஞ் ....................*
சாலத்தைநீசெய்கிருயோவெனவுன்றனையுநொந்தோம்........................*
பாலத்தைபுற்றவிழியுமையேயிந்தப்பஞ்சம்வந்த ..................................*
மூலத்தையின்னமறியேந்திகைத்தனமுற்றிலுமே...................................(கூ)

முற்றினநெற்றெனவற்றினதெம்முடன்மூள்பசியாற்................................*
ச ற்றுமுன்னெஞ்சிரங்காததென்னேயிப்பஞ்சத்திலேதேன்.........................*
விற்றுத்தின்போமெனிலாமானதில்லைமிடியதனு..................................*
விற்றைவனைகஷ்டப்பட்டதுபோதுமிரங்குவையே.................................(ய)

இ ரந்துகுடிப்பவர்க்கோபஞ்சத்தாற்குறையென்னமுன்போ ........................*
னிரந்தரம்பிச்சையெடுத்துண்பர்செல்வமொன்னிற்குறையோ.........................*
த ரந்தப்பியெந்தரக்காறர்களேமெலிந்தாரினியுன்.....................................*
வ ரந்தந்தளித்திடவம்மாவுனக்கிதெம்மாத்திரமே......................................(யக)

மாத்தின்றுங்கேப்டைக்களித்தின்றும்புன்மண்டிவாய்மடுத்து ........................*
நாத்தின்றுமெல்லப்படுங்கீரைகடின்றுநாங்களுயிர் ........................,..............*
காத்தின்றுவனைபினுங்கழித்தோம்பஞ்சகாலத்தையே..................................*
கூத்தின்றுறைப்படியாடவல்லான்மகிழ்கோகிலமே.....................................(யஉ)

கோகனகத்திருவேபசியாலுங்குழைந்துபட்ட.............................................*
சோகமெல்லாமெங்கடாயானவுன்னுடன்சொல்வதல்லாற்...............................*
கா கவறிவின்றித்தாமேவைத்துண்ணுங்கயவர்தம்பா.....................................*
லே கவுடலுமொலுகுதம்மாவுள்ளமெஞ்சலுற்றே........................................(யஙு)

எ ஞ்சாண்கும்பிக்கிரைக்கேயிந்தமட்டெனிலென்னசெய்வோம்..........................*
ப ஞ்சாங்கத்தேனுமிப்பஞ்சாங்கநீங்குமென்பார்களில்லை..............................*
ந ஞ்சாங்கவலையெவர்படுவார்பலநாளுமம்மா...........................................*
செஞ்சாலியின்விலைசீராகநீயருள்செய்குவையே.........................................(யச)

செ ய்களுள்ளோர்கள்பயிரிடுவார்நெல்லைச்சேர்த்துவைப்பார் *
மெ ய்கொழுக்கும்படியுண்டிடுவார்நென்மிகுந்ததைவி *
லை கட்குவிற்றுவருடந்தப்பாமனைகைகள்செய்வார் *
கொய்கமழ்பூங்குழலாய்பஞ்சத்தாலென்குறையவர்க்கே (யரு)

அ வமதித்தாற்கதிவேறில்லைநீயன்னையாயிருந்து *
மி வளவுதூரங்கஷ்டப்படப்பார்த்துமிருப்பதென்னே *
வெவளவுகுற்றஞ்செய்கின்றபொல்லாப்பிள்ளையென்னினுந்தாய் *
த வறவிடுவதுண்டோவேதம்மாவடஞ்சாதிப்பதே (யசா)

சா தித்தன்யாயத்தெமைநீங்கிடாச்சஞ்சலவிருட்கே *
ரா தித்தன்போல்வந்தருளின்றுகோபமடிமைகண்மே *
லேதித்தனையுனக்கம்மாவிப்பஞ்சத்திலெப்படிச்சம் *
பா தித்ததிலென்னகாணுதம்மாசம்பளப்பணமே (யள)

பணமிருந்திப்பஞ்சம்வந்துவிட்டாலொருபாரமில்லை *
புணவின்பொருட்டுக்கடன்கொண்டதோதரத்துக்கதிக *
மணமற்றசீவனத்தாலேபுசிப்பதெவ்வாறுகொண்ட *
ரணமுந்தொலைப்பதெவ்வாறுசொல்வாய்நெல்லைநாயகியே (யஅ)

அகிலாண்டநாயகியேபஞ்சத்தாலுய்வதையமென்றே *
திகிலாண்டதேயெம்மையென்செய்குவோமைவர்தேவிக்குமுன் *
றுகிலாண்டவன்றங்கையாயிருந்தும்படுதுன்பமற *
முகிலாண்டவெங்களைக்காவாதிருத்தன்முறையல்லவே (யகூ)

அ ல்லும்பகலுமிப்பஞ்சத்திற்பட்டவவதியெல்லாஞ் *
சொல்லும்பொழுதிலுருகாததொன்றுளதோகடிய *
க ல்லுங்கனிந்திடுமேயுனக்கோவிரக்கங்களில்லை *
செ ல்லுந்தவசமுமெல்லாமலிந்திடநீயருளே (உய)

அ ருள்கொடுத்தாலன்றியீடேறுவதிங்கரிதுபொல்லா *
ம ருள்கொடுத்தாலெவர்தாம்பிழைப்பாருய்யும்வண்ணமினித் *
தெ ருள்கொடுத்தாதரவாய்வறுமைப்பிணிதீர்த்தெமக்குப் *
பொருள்கொடுத்தாலுனையார்தடுப்பாரிந்தப்பூதலத்தே (உக)

பூதரவில்லியைநெல்லேசனைத்தண்புனன்முடித்த *
நாதனைவேணுவனத்தனைமன்றுணடம்புரிந்த *
பாதனைச்சேர்ந்தபராசத்தியேயிந்தப்பாரிலெங்க *
ளாதரந்தீரக்கருணைசெய்வாயுலகாண்டவளே (உஉ)

ஆ ண்டாண்டுதோறுமிப்பஞ்சத்தினற்றொலையாக்கவலை *
பூ ண்டாலெளியவர்க்கெவ்வாறிந்நாட்பிழைப்புக்கிடமே *
தூ ண்டாமணிவிளக்கேபலவாறெம்மைத்துன்பஞ்செய்ய *
வேண்டாமிவளவுபோதுமம்மாசெய்தவெவ்வினைக்கே (உங)

வினையின்றுயர்கெடுமென்றேவரந்தரல்வேண்டுமல்லாற் *
பினையொன்றும்வேண்டிலமம்மாசகலபிராணிகட்கு *
ம னையென்றுநீயுறலாலேசரணென்றடைந்தனமியா *
முனையன்றிவேறில்லையென்றுநன்றாயெம்முளத்தெண்ணியே (உச)

எ ண்ணியவெண்ணங்களொன்றாகிலுநிறைவேறவில்லைப் *
ப ண்ணியதீவினைக்கென்றோவெமக்கிப்படியமைத்தாய் *
தி ண்ணியவந்தவினைகளெல்லாமினித்தீர்வதெந்நா *
ணண்ணியவெங்களையீடேற்றுவதுமெந்நாளுனாயே (உரு)

நா ளுக்குநாள்விலையேறுதம்மாகடனாகுதம்மா *
தேளுக்குநேரிந்தப்பஞ்சத்திலேயென்னசெய்வமம்மா *
வாளுக்குவமைசொலும்விழிக்காந்திமதியம்மைநின் *
றா ளுக்குநாங்களடிமையென்றேவந்துசார்ந்தனமே (உசு)

த னத்தைப்படைத்திருந்தானன்மையேற்பவர்தங்களுக்கே *
ய னத்தைப்படைத்திருந்தானந்தமேபெறலாமதன்றி *
ம னத்தைப்படைத்திருந்தான்மாத்திரந்தவம்வாய்த்திடுமோ *
வெனத்தைப்படைத்திருந்தாலென்னவென்றுள்ளமீர்க்கின்றதே (௨௭)

ஈ ர்க்கப்பதறுநெஞ்சுற்றேமிப்பஞ்சத்திலேழைகளைப் *
பா ர்க்கப்பதறுதம்மாவிதையார்சகிப்பாரொன்றுடல் *
வேர்க்கப்பதறுதல்கண்ணுரக்கண்டுமிவ்வேதையெல்லாந் *
தீ ர்க்கப்பதறுவதோதயவானதிருவுள்ளமே (௨௮)

உ ள்ளக்கவலையெவ்வாறுரைப்போமுன்னுடன்பிறந்த *
க ள்ளப்பிரான்வயிற்றில்வேதனையுற்றுங்காட்டிற்சென்றுங் *
கொள்ளப்படாதகொடும்படையாய்ப்பஞ்சங்கூடுகையா *
ல ள்ளிமண்ணைத்தின்றுமாவடிகாப்பதுமியாமறிந்தே (௨௯)

யாமளையேயுன்மணவாளரோடுரைத்தாலுமவர் *
தாமென்செய்வாரொன்றுள்ளெண்ணுதம்மாவென்னத்தாலெனிலோ *
வீமத்திலேநடித்தெக்காலும்பிச்சையெடுத்தலைந்துண் *
டேமலைவாய்முகமும்பஞ்சங்காட்டியிருத்தல்கண்டே (௩௰)

க ண்டனஞ்செய்யுங்கணபதியேபஞ்சங்கண்டுமெய்து *
வ ண்டனமென்றனங்கேட்டேனமோமுகமாறவைத்துக் *
கொண்டனனிங்கெனக்கும்பஞ்சமாகக்கைகூடிற்றென்று *
வி ண்டனனுலெங்கட்கார்துணைநீயுங்கைவிட்டிடிலே (௩௧)

விட்டுணுதங்கச்சியேபிரப்போரொங்கள்வீட்டில்வந்தா *
லிட்டுணும்வண்ணநிதியளிப்பாய்பஞ்சமேதலையாய்க் *
க ட்டுணுமெங்கடுயர்தவிர்ப்பாயென்றுகண்டுதிடுக் *
கிட்டுணார்ந்தேபணிந்தோம்வில்க்காயிக்கெடுதலையே (௩௨)

தலையெழுத்திதென்றுகண்டோம்பெருமைதளரக்கண்டோம் ❊
விலையொருகோட்டைநெல்ரூபாய்பனிரெண்டுவிற்கக்கண்டோ ❊
நிலைகெடப்பஞ்சமுஞ்சேரக்கண்டோந்துன்பநேரக்கண்டோங் ❊
கலையவிடாதெம்மையாட்கொள்ளநீவரக்காண்கிலமே (௩௩)

காணுதிப்பஞ்சத்திலம்மாவெங்கஷ்டக்கணக்கைச்சொல்லத் ❊
தோணுதுமெத்தவுமுன்பால்வந்தேயுன்றுணையடியைப் ❊
பேணுதுங்காந்திமதியேநிதியுள்ளபேரைக்கண்டா ❊
ணுதுநீயிரங்காவிடிலார்சொல்வர்ஞாயமென்றே (௩௪)

ஞாயிறுபோன்றகுழைக்காதுந்திங்கணைகைமுகமுந் ❊
தூயசெவ்வாயுஞ்சிலம்புதணைக்கொடிணையடியும் ❊
வேயவியாழமர்செங்கையுமாய்வெள்ளிடபமிசை ❊
நீயெழுவாய்பஞ்சமிஞ்சனியாயங்கணீங்கிடவே (௩௫)

நீங்கித்தளர்ந்திடுமுள்ளன்பிலார்பத்திநித்தநித்தந் ❊
தாங்கித்தளர்ந்திடுஞ்சண்டாளனைப்புவிதாழ்சுடரி ❊
னோங்கித்தளர்ந்திடுமீயாதவர்செல்வமுணுமின்றி ❊
யேங்கித்தளர்ந்திடும்பஞ்சத்திலேழைகளெங்கெங்குமே (௩௬)

எங்குறைபாட்டையெல்லாஞ்சொலக்கேள்பஞ்சமென்பதெனை ❊
யிங்குறைபோலவுமூடிற்றம்மாமனத்தின்னலெனுங் ❊
கங்குறையாவண்ணஞ்செங்கதிராகிக்கங்காதரனார் ❊
பங்குறைகாந்திமதியேதிருவருள்பாலிப்பையே (௩௭)

பாலிக்குங்காந்திமதியெனுந்தெய்வமிப்பார்புகழ்நெல் ❊
வேலிக்குணீயொருதாய்போலிருந்தும்வெகுண்டுபஞ்ச ❊
காலத்தைப்போக்கநினையாததுமென்னகாரணமே ❊
நீலித்தனத்தைச்சரிக்கட்டவோவிங்நிலைநின்றதே (௩௮)

நிலைநிற்கவேழைக்கிரங்கியெக்காலமுநென்மலிந்து *
விலைவிற்கவேதிங்கண்மும்மாரிபெய்விக்கவேண்டுமம்மா *
வுலையுற்கம்போற்கனன்றெத்தனைநாட்கொதிப்போமிப்படி *
யலையற்கினியெங்களான்முடியாதுநெல்லைவடிவே (௩௯)

வடிவேயெங்காந்திமதியேயிப்பஞ்சத்தின்வன்மைசொல்ல *
மிடியேங்கட்காயிரம்வாயாகிலுமினிவேண்டுமிந்தப் *
படியேங்கவைத்ததெதுகாரணத்துக்குப்பாவத்தினா *
லடியேங்கள்செய்தகுறையோசொலிப்படியானதுவே (௪0)

ஆனாலுமம்மவிப்பஞ்சத்துக்கேதினியாற்றுவமோ *
போனாலுநம்முயிர்போகட்டுமென்றுனைப்போற்றுவமோ *
தானாவிதுதெளியாதிதுநீங்கவுன்றண்ணருள்செய் *
மானாபிமானமுங்காத்தருள் காந்திமதியம்மையே (௪௧)

மதியேதுமின்றிமனமருண்டோம்பஞ்சவன்மையினாற் *
றுதியேயுனைச்செய்துமம்மாவெமக்கிந்தத்துன்பம்வந்த *
விதியேதுகாந்திமதியேயருளெங்கண்மீதில்வைக்கத் *
தகியேயிப்போதன்றிவேறெந்தநாட்சொல்சதாநந்தியே (௪௨)

நந்தாமணிவிளக்கேசெல்வியேநெல்லைநாயகியே *
செந்தாமரைமகளுமகள்போற்றுஞ்சிகாமணியே *
சிந்தாகுலங்கெடமெய்யடியார்களிச்சிப்பதெல்லாந் *
தந்தாளுங்காந்திமதியேயிரங்கருட்டன்மைகொண்டே (௪௩)

கொண்டாடுவாரிந்தப்பஞ்சத்தைநெற்கட்டிக்கொண்டுவிற்போர் *
திண்டாடினேம்புகல்வேறேயிடமின்றிச்செல்வனைப்போய்க் *
கண்டாலும்பேசிலர்வெம்பசியாலவர்காதினிலே *
விண்டாலுந்தள்ளுதள்ளென்பார்கள் சீறிவெடுவெடென்றே (௪௪)

வெ டுவெடென்றேசொலும்வீணைப்பாடிவியந்தலைந்து *
கொ டுகொடென்றாலுமிங்கம்மாவனைச்சல்லிகூடக்கொடா *
ர டிமைகொள்காந்திமதியேயிதனையறிந்திருந்துங் *
க டுகளவாயினுநீயிரங்காதென்னகாரணமே (சரு)

கா ரணிசேர்ந்தகுழலாளையம்மையைக்காந்திமதிப் *
பே ரணிசேர்ந்தவுமையாளைத்துன்பப்பிணிமருந்தைச் *
சீ ரணிசேர்ந்தகவியாற்றினந்துதிசெய்திடுவோ *
மோரணிசேர்ந்தவிப்பஞ்சத்தின்மூர்க்கங்களோய்வதற்கே (சசு)

ஓ யாக்கவலையொழிவதெப்போதெனவுன்னிடத்தி *
ஞ யாவலைகின்றவிவ்வேளையினெல்லைநாயகியே *
நோயானபஞ்சமும்வாதிக்குதேயிந்தநுண்பலத்தைத் *
தா யானவுன்னுடன்சாற்றுமலாருடன்சாற்றுவதே (சஎ)

சா ற்றருஞ்சீர்த்தியுடையவளேநற்றடம்பொருனை *
யா ற்றினெடுந்துறைமேல்பாரிசத்திலமர்ந்தவளே *
மா ற்றிடுவாயிந்தப்பஞ்சத்தையம்மவுன்மாமலர்த்தாள் *
போற்றிடுந்தொண்டர்செய்குற்றங்கள்யாவும்பொறுப்பவளே (சஅ)

பொறுமைக்குணநினக்கென்பதுகஷ்டம்பொறுத்தலையோ *
சி றுமைப்படுவதும்பட்டதும்போதுமிச்சென்மத்துக்கும் *
ம றுமைக்குங்காணுமதினுமிப்பஞ்சத்தின்மாகொடிய *
வ றுமைப்பிணிகள்வந்தாலதைப்போலில்லைமானிகட்கே (சகூ)

மா னங்கொடுநல்வரங்கொடுமங்களவாக்குக்கொடு *
ஞா னங்கொடுபஞ்சநீங்கிடவேயருணோட்டங்கொடு *
நா னங்கொடுங்கமழ்பூங்குழலேநெல்லைநாயகியே *
பீ னங்கொடுந்துன்பநாடாதிங்குய்வண்ணமெந்தமக்கே (ருய)

எ ந்தக்கவலையினுங்கொடிதானதில்லாமையதெஞ் ❋
சொ ந்தக்கவலையதுதீரவில்லையித்தொல்லையுடன் ❋
ப ந்தக்கவலையொப்பாகியபஞ்சம்பரவிற்றம்மா ❋
வி ந்தக்கவலைப்படமுடியாதெங்கட்கின்னமுமே (௫௧)

இ ன்னபடியென்றுணையாதிருப்பதுமென்னமுகி ❋
ல ன்னபடிவக்குழலுமையேநெல்லையப்பர்முன்னஞ் ❋
சொன்னபடிநெல்லிருநாழியீவதிற்சோர்வுமுண்டோ ❋
வெ ன்னபடியளக்கின்றுரெங்கட்கதையேனுஞ்சொல்லே (௫௨)

சொற்பொருள்பூமணமெள்ளெண்ணைகன்னல்சுவையெனவே ❋
ப ற்பல்சராசரத்துங்கலந்தேநின்றபார்வதியே ❋
நெ ற்படியேறும்படிக்கருள்வாய்பஞ்சநீக்கியம்மா ❋
வெ ற்பனையன்றந்தகண்மணியேநெல்லைமெய்ப்பொருளே (௫௩)

மெய்க்கவநேகரைச்செல்வர்களாய்ப்புவிமீதில்வைத்தாய் ❋
மி க்கவுமெங்களைப்பொல்லாவறுமையில்வீழ்த்திவிட்டாய் ❋
ம க்களிலேபக்ஷபாதஞ்செய்தாலெவ்வகைபிழைப்போங் ❋
கி க்குனையன்றியொருவருண்டோபஞ்சந்தீர்ப்பதற்கே (௫௪)

தீ ராதவல்வினைதீர்ப்பாயென்றேமறைசெப்புதலை ❋
யோராதிதுவரைவீணேயலைந்தனமுன்னையன்றி ❋
யா ராரிருந்தென்னகாந்திமதீயினியாவதருள் ❋
கூ ராவிடிற்சொல்வதெவ்வாறுனையனுகூலியென்றே (௫௫)

கூ லிக்குவேலைகள்செய்தேபிழைப்பவர்கொட்டைகணூற் ❋
று லிக்குவலயத்திற்பிழைப்புண்டென்றுள்ளார்களுன்னெல் ❋
வே லிக்குளிவ்விதம்பஞ்சங்கண்டாலெவ்விதம்பிழைப்பார் ❋
பா லிக்கவேண்டுமெம்மாவிந்தவேளைகண்பார்த்தருளே (௫௬)

பா ர்வதியேயெந்தத்துன்பமுநின்னருட்பார்வையினற் *
றீ ர்வதிலிப்பஞ்சமாத்திரமேனதிற்றீர்வதில்லை *
சோர்வதில்லாதுங்களெண்ணங்கைகூடுஞ்சுகமுண்டென்று *
சீ ர்வதிகாந்திமதியம்மையேயெங்கள்சீர்நினைந்தே (௫௭)

நை ந்துசொன்னோக்கமறிவாய்முன்சுந்தரனானடந்து *
ச ந்துசொன்னோன்மகிழ்சேர்காந்திமதியுன்சந்நிதியில் *
வ ந்துசொன்னோமின்னமுந்தீர்ந்திடாததில்வாடிமன *
நொந்துசொன்னோம்பொய்த்ததோவிடைக்காடர்தநூலென்றுமே (௫௮)

நூ ற்பஞ்சலக்ஷணங்கற்றுனைப்போற்றுமனுக்களும்பார் *
மே ற்பஞ்சலக்ஷணங்கண்டுநொந்தாருன்னைவேண்டினபேர்க் *
கே ற்பஞ்சலக்ஷணங்காட்டாதொழிப்பையெனுஞ்சொல்பொய்யோ *
தோ ற்பஞ்சலக்ஷணங்காணடையாயென்கொல்சூழ்ந்ததையே (௫௯)

த தைப்பாயளிமுரல்பூங்குழலாளுக்குத்தாரகமென் *
ற தைப்பாதுகாக்குநெல்லைவடிவாளுக்கடிமைப்பட்டும் *
ப தைப்பான்முன்போற்பஞ்சத்தாலேவருத்தப்படுவதென்று *
விதைப்பார்க்கிலுமிங்கதிசயம்வேறினியென்னவுண்டே (௬௰)

என்னபிழைப்பெம்பிழைப்பென்றுநாங்களெடுத்துணைப்போங் *
கன்னன்மொழிநெல்லைநாயகியேபஞ்சகாலத்திலே *
மன்னர்தயவுசம்பாதித்துமேபெருவாழ்வுபெற *
வுன்னபிமானமில்லாவிடிலெவ்வண்ணமுய்வண்ணமே (௬௧)

உ ய்வண்ணநாங்கள்வந்துன்றாட்கடிமைப்பட்டோம்வடிவே *
கை வண்ணங்கால்வண்ணங்காந்தள்செந்தாமரைகாட்டுமுன்றன் *
மெய்வண்ணம்பாதிகொள்வேணுவனேசர்க்குவிண்டுதவி *
செய்வண்ணநீயுளங்கொள்வாயிப்பஞ்சந்தெளிந்திடவே (௬௨)

தெ ளித்துக்கொள்ளாமருட்சிந்தையராயினுந்தேடுபவர்க் *
கொ ளித்துக்கொள்ளாதவுன்சேவைகண்டாலவர்க்குங்குறையோ *
நெ ளித்துக்கொள்ளாடரவார்புயன்சேருநெல்லைவடிவே *
சு ளித்துக்கொள்ளாதிந்தப்பஞ்சத்தையென்றுசுருக்குவையே (௬௩)

சு ருக்காமிங்கல்வழிமுன்றெரிந்தீரில்லைத்தொல்புவியீர் *
பெ ருக்கானபேய்மதிநீர்படைத்தீரினிப்பேசிலென்ன *
ம ருக்காலெறிகுழலாணெல்லைக்காந்திமதியம்மைபே *
ரொருக்காற்சொன்னாற்பஞ்சமெல்லாம்பஞ்சாய்ப்பறந்தோடிடுமே (௬௪)

ஓ டங்கவிழ்த்தவிதம்போற்பொருளெங்கட்குள்ளதெல்லாங் *
கூடுமிப்பஞ்சங்கவிழ்க்கின்றதென்னகொடுமையம்மா *
சூடகக்கைநெல்லைநாயகியேபஞ்சந்தோன்றியெம்மை *
யீடுபடுத்தியகஷ்டத்துக்கேயில்லையெல்லையுமே (௬௫)

எ ல்லாரைப்போலவும்வைத்தனையோவெம்மையிவ்வுலகி *
லி ல்லாளராக்கிப்பசித்தோர்க்கனமில்லையென்னச்செய்யு *
மி ல்லாமையொன்றதையில்லாமையாக்குவதென்றைக்கதுஞ் *
சொல்லாதிருப்பதுவோநல்லநீதியுன்றொண்டர்கட்கே (௬௬)

க ட்கடைகொண்டுசற்றுயினும்பார்சங்கடங்களைக்கே *
ளுட்கிமனத்துள்விசாரத்தினாலுடலுப்பிருந்த *
ம ட்கலம்போலவுமானதிவ்வேளையில்வந்தருள்வாய் *
ச ட்கமலானனற்பெற்றவளேநெல்லைச்சங்கரியே (௬௭)

ச ங்கார்தடங்கைநெல்லைவடிவேதுன்பசாகரத் துண் *
மு ங்காதிருக்கவினியாகிலுமன்புமுற்றும்வைப்பா *
யெங்காதறீர்ந்திடவிங்காதரவுடனெங்களுக்கு *
ம ங்காதசெல்வந்தந்தெந்நாளுங்காத்துவரன்முறையே (௬௮)

முறைக்குன்குழந்தைகளியாம்பஞ்சத்தாற்பட்டமோசமெல்லா *
மறைக்குந்தெளிதற்கரிதானவேணுவனத்தனொனு *
மிறைக்குமுனக்கும்விபரமதாய்முறையிட்டுமின்ன *
முறைக்கும்வெபின்மிகுதேபிதுவோவுன்னுதவியுமே (௬௯)

உதறுதம்மாவுடலைப்பசிநோய்மனவூக்கங்களுஞ் *
சிதறுதம்மாநிர்க்கதியாகியேழைஜெனங்களெல்லாங் *
கதறுதம்மாவிப்படிபடும்பாரதங்காணநெஞ்சு *
பதறுதம்மாவெப்படிபிழைப்போமென்றிப்பஞ்சத்திலே (௭௰)

பஞ்சத்திலேயிந்தவல்விலைபாற்படும்பாட்டையம்மா *
கொஞ்சத்திலேசொல்வதுண்டோவந்தூதுநெற்கொப்பந்தமாய் *
நெஞ்சத்திலேயொருவாதாரமுமில்லைநெல்லையில்வா *
மூஞ்சத்தியேயிந்தவேளைதற்காப்பதுமுன்பரமே (௭௧)

பரமேட்டிகற்பனையோபஞ்சத்தாற்களைப்பாகியது *
யரமேட்டிலேயடங்கத்தக்கதோசொல்லருமைகெட்ட *
நரமேட்டிமைகொண்டபேர்களைப்பாடியுநாட்கழித்த *
தரமேட்டிற்கேயினாத்திட்டதண்ணீரினுந்தாழ்வுற்றதே (௭௨)

தாழ்ந்துபணிந்தனமம்மாபொல்லாதபஞ்சக்கொடுமை *
சூழ்ந்துகொண்டெங்களைவாட்டுதம்மாவிங்குன்றுண்டரொன *
வாழ்ந்திடுநாங்களொரோதீர்வையாய்வறுமைக்கடலி *
லாழ்ந்துவிடுதெனன்றேதொலைப்பாயிந்தவல்லலையே (௭௩)

அலையாவலைச்சலலைந்தேயிப்பஞ்சத்தினுலெளியே *
முலையார்மெழுகொத்துருகினந்தீர்க்கவுனக்கிதென்ன *
மலையாவெங்காந்திமதியேபராமுகமாயிருந்தா *
னிலையாவறுமைக்கடலிலெவ்வாறம்மநீந்துவதே (௭௪)

நீ ந்தரும்பஞ்சத்தினுற்கயவோனைநெருங்கிலிறு *
மா ந்திழிவாய்மதிக்கின்றூர்பிறர்தம்வருத்தங்களை *
யாய்ந்துணராரிவரோன்பிறந்தாரிந்தவற்பர்கட்குங் *
கா ந்திமதியம்மவெல்லாமுன்னுல்வந்தகட்டுமெட்டே (௭௫)

மெ ட்டுக்கெட்டோம்பொருளில்லாமையானெல்விலைகளெங்கண் *
ம ட்டுக்கெட்டாதபடியானதன்றியும்வாழையிலை *
து ட்டுக்கெட்டாமதுவுங்கிடையாதலைந்தோடியெங்குந் *
த ட்டுக்கெட்டேங்கினதம்மாசொலவுந்தரமில்லையே (௭௬)

இ ல்லுக்குச்சங்கடந்தீர்வதென்றேவென்றிருக்கையிலே *
நெல்லுக்குஞ்சங்கடமாச்சிதுகூறிநிதியுளர்பான். *
ம ல்லுக்குநின்றுமனமோசலித்ததம்மாபழைய *
செல்லுக்குப்போக்கென்னசொல்வோமென்றுள்ளந்திகைப்புற்றதே (௭௭)

திகைப்புக்கிடமிப்படிசிறியேங்கடிரிவதென்று *
னகைப்புக்கிடமல்லவோவுனக்கேயிதுநாள்வணக்கும் *
ப கைப்புக்கிடமிடியால்வைத்தல்போதுங்கண்பார்த்தருள்வாய் *
சி கைப்புக்கிடங்கங்கைக்கேதந்தவீசனைச்சேர்மயிலே (௭௮)

ம யில்விளையாடும்படிமேகஞ்சூழ்ந்துமழைவிழுந்தால் *
வெயில்விழுமோவிப்படியேயப்போநெல்விலையும்விழுஞ் *
செயில்விழும்வித்தும்விளைவாயிப்பஞ்சத்தினைவிழுங்கு *
ம யில்விழிக்காந்திமதியேகுறையென்னடிமைகட்கே (௭௯)

அ டிமைகட்கும்வரலாமோவிக்கஷ்டமதிகசெழிப் *
பொடுமையமின்றிநெல்லெங்கெங்குமேவிளைந்தும்மடியாற் *
க டுமையதாய்ப்பஞ்சுயர்ந்ததுபோலென்னகாரணமோ *
கொடுமையதாம்விலையாயிற்றம்மாவொருகோட்டைநெல்லே (௮௰)

ெ நன்மண்டிக்கேகக்கணக்கில்லையுப்புடனேமிளகாய் ❊
பு ன்மண்டியோடுகெடித்தேகுடிக்கப்பொருந்துவதிற் ❊
சொன்மண்டிநோயுமண்டிக்கும்பிகாந்தித்துறத்துமண்டி ❊
ய ன்மண்டிடுங்குழலாயிதுவோவுனதாதரவே (அக)

ஆ தரிப்பார்களொருவருமில்லையிங்காண்டவளே ❊
நீ தரிப்பார்மிசைக்காணோம்பொருளைநினைந்துதண்ணீர் ❊
மீ தரிப்பார்களிற்றேடியுங்கங்கையைவேணிதனி ❊
லேதரிப்பார்பங்கிருப்பவளேயுன்னையன்றியுமே (அஉ)

அன்றொருக்கால்வந்தபஞ்சத்தைநீதொலைத்தாயதுபோ ❊
லின்றுமிப்பஞ்சத்தைநீயேதொலைத்திங்கெமைப்புரப்பா ❊
யு ன்றிருவுள்ளமிரங்கிடிலெவ்வுயிரும்பிழைக்கு ❊
ம ன்றெனிலோகதியில்லையம்மாநெல்லையம்பிகையே (அங)

அ ம்பிகைகாந்திமதியேயெந்நாளுமடுத்துமுன்னை ❊
ந ம்பினபேர்பெறும்பேறிதுவோவன்னபானமின்றி ❊
வெம்பினவேழைகளீடேறநீயிந்தவேளையொரு ❊
சி ம்புள்ளெனவந்தொழிப்பாய்பஞ்சானனசிம்மத்தையே (அச)

சி ம்மாசனபதிகேள்வியுமில்லைநெற்சேர்வைகட்டி ❊
யி ம்மாயவல்விலைகூறுகின்றார்கடனேனுநல்கார் ❊
ைகைம்மேற்பணங்கொண்டுவாவென்கிறார்கையிற்காசுமில்லை ❊
ய ம்மாவிப்பஞ்சத்திலெவ்வாறுய்வோமெனவஞ்சினமே (அரு)

சி னமோவுனக்கெங்கண்மீதிலம்மாகொடுந்தீவினைசெய் ❊
த னமோவலதிந்தப்பொல்லாக்கலியுகதன்மமிதோ ❊
வெனமோதெரியவில்லையேபிரக்ஷித்திடவினித்தான் ❊
ம னமோவெங்காந்திமதியேசொலிப்பஞ்சம்வந்ததுவே (அசு)

வந்தனைசெய்துனைப்போற்ருதவரிடம்வைத்திடுங்கோ *
பந்தனைக்கொண்டிந்தப்பஞ்சத்தைநீவரப்பார்த்திருந்தா *
லுந்தனையேபணிவோருமம்மாவதற்குண்மெலிந்து *
நிந்தனைக்கேயிடமாகிலென்னுகுமுன்னீதிகளே (௮௭)

நீ திருவாய்மலர்ந்தஞ்சலென்ருலுடனேபுவியின் *
மீ தினிலேயிந்தப்பஞ்சமுநீங்கும்விளைவுமிகு *
மே தினிமேலொருகஷ்டமுமில்லையென்றியாங்களுய்வோ *
மா திருநெல்லைநகர்வாழுங்காந்திமதியம்மையே (௮௮)

அம்மாவம்மாவென்றழுங்குரல்கேட்டிரங்காமலுந்தாய் *
சும்மாகிடக்கட்டும்போவென்பளோபெற்றதொந்தம்விட்டே *
யிம்மாதிரிவன்மைகொண்டதென்னேயன்னையென்றிருந்தும் *
பெம்மானெல்லேசர்மகிழுமிமாசலப்பெண்ணரசே (௮௯)

அரசற்றவாக்கினைபுண்டோவிதுமுதலாகமழை *
வருஷித்துப்பூமிசெழிக்கச்செய்தம்பலவாணரிடம் *
பரிசுற்றகாந்திமதியம்மையேயிந்தப்பன்னிரண்டு *
வருஷத்துப்பஞ்சத்தைநீக்கியன்பாயெம்மைவாழ்விப்பையே (௯௰)

வாழ்விற்குறையில்லைகண்ணேறுமில்லைவறுமையில்லை *
தாழ்வில்லைநோயில்லையஞ்சுதலில்லைபஞ்சங்களில்லை *
பாழ்வினையாற்றுன்பமுமில்லைநெல்லைப்பதிவடிவைச் *
சூழ்வருந்தொண்டர்கட்கென்றறிந்தோமிதிற்சோர்வில்லையே (௯௧)

சோராமனமுண்டுமாருமலின்பசுகமுமுண்டு *
பாராளுமன்னர்பௌசுண்டுபார்மிசைப்பஞ்சமினி *
வாராதருணெல்லைநாயகிகாந்திமதியம்மைப் *
பேராதரமுடன்போற்றிடவேயன்புபெற்றவர்க்கே (௯௨)

பெற்றோஞ்சகலவரங்களெல்லாம்பெற்றபின்கவலை *
யற்றோமனுதினம்பொற்றாமணாப்புனலாடிமகிழ் *
வுற்றோமிந்நெல்லைவடிவாளையன்றிமற்றொன்றுமனம் *
பற்றோமவளருளாலேநிதியும்படைத்தனமே (௯௩)

படைகொண்டுவந்தவிப்பஞ்சந்தெளியவும்பத்தர்மனத் *
திடைகொண்டுளதுன்பொழியவுங்கோபித்தெழும்புலித்தோ *
லுடைகொண்டுகங்கையணிநெல்லைநாதருடன்றிருமால் *
விடைகொண்டுகாந்திமதித்தாய்பொன்னாலயமேயினளே (௯௪)

மேயவிண்ணார்ந்திட்டவைங்கோபுரங்கள்விளங்குதிருக் *
கோயிலுணெல்லைவடிவாளைப்பண்டுசெங்கோலறுப *
தாயிரமாண்டுமுடிதரித்தேபுலகாண்டவனைத் *
தூயகண்ணாற்றரிசித்தோமற்றோமெந்துயரமின்றே (௯௫)

அரமென்றுளேநின்றறுக்குங்கவலையெல்லாந்தொலைத்தா *
டிரமென்றுமிக்கபொருளளித்தாள்பஞ்சந்தீர்த்துவிட்டாள் *
வரமென்றுநீடவருளினள்காந்திமதியம்மையைப் *
பரமென்றுநம்பினபேர்க்கொருநாளும்பழுதில்லையே (௯௬)

பழுதுவராதுபுரந்தாயம்மாவிந்தப்பஞ்சத்திலே *
தொழுதுவராநின்றவெங்கலிதீர்ந்துசுகமடைந்தோ *
முழுதுவராமிதழ்த்தாயேயுன்சீர்த்திமுழுமையையு *
மெழுதுவராரடங்காதுப்ரமானந்தமெய்தியதே (௯௭)

எய்தருமோக்ஷம்விரும்பாமற்காமியமேவிரும்பிக் *
கைதொழுதிவ்வண்ணம்வேண்டியவெங்கள்கருத்தின்படி *
யுய்திறந்தந்ததுபோலேபரகதியும்பெறவே *
செய்திடக்காந்திமதியேயெவ்வாறுன்றிருவுளமே (௯௮)

உளமேகொண்டாயென்றறிந்தோமினிக்குறையொன்றுமில்லை *
யளகாபுரியினுமோங்கியசீர்நெல்லையம்பதியுட் *
புளகாங்கிதமுடன்வாழ்வோமெங்கெங்குமுப்போகங்களும் *
விளைவாகவென்றென்றுமாதமும்மாரிபெய்விப்பதற்கே (௯௯)

வி ப்பிரராதிகுலம்வாழ்கத்தன்மம்விளங்கமுறை *
த ப்பின்றிமாரிபொழிகவிப்பூமிதழைக்கமன *
மொப்பியகாந்திமதியேயிப்பஞ்சமொழிந்ததென்றே *
செ ப்பியினிதருள்செய்தாய்திருநெல்லைச்செந்திருவே (௱)



## நேரிசைவெண்பா.

நூ றுகலித்துறையும்பாடினுமக்களவில் ........................ *
பேறுகலித்துறையும்பெருலகீர் தேறுமன்பு ............ *
கந்தெளிதாயென்றுநெல்லைக்காந்திமதியேகொடும்பஞ் . *
சந்தெளிதாயென்றுள்ளதால் ........................................ *

## திரிபங்கி

துயர்நல்கா, ணெஞ்சமே, சோர்ந்திடுவா, னேன்புன் ...... *
செயறெடுத்தபஞ்சமேதீர்ந்தும் பயமினியென் ...... *
செஞ்சாலிசேர்ந்தவிலைசாய்தல்கண்டோந்தீவினைதீர் ..... *
சஞ்சீவிகாந்திமதித்தாய் ............................................ *



காந்திமதியம்மைபேரிற்கலித்துறையந்தாதி.

முற்றுப்பெற்றது

